# தமிழச்சி

கவிஞர்: வாணிதாசன்

மலர் நிலையம்
133, பிராட்வே... சென்னை-1.

# முன்னுரை

**சி**ற்றூர்ப் பெண்கள் திருந்தினால்தான் நாடு திருந்தும் என்பது என் துணிவு. அத் துணிவில் தோன்றியவளே **தமிழச்சி!** அவளை மக்கள் மன்றத்தில் நிறுத்துகிறேன்.

இச் சிறு காவியத்தின் முதற் பதிப்பை வாழ்த்துரை, சிறப்புரைகளோடு அழகான முறையில் பதிப்பித்துதவியர்கள் **புதுக் கோட்டைச் செந்தமிழ்ப் பதிப்பகத்தார்** ஆவர். அவர்க்கும், கூட்டல், குறைத்தல், திருத்தல் ஆகிய யாவும் பெற்ற இந்த இரண்டாம் பதிப்பை வெளியிட்டுதவிய **மலர் நிலையத்தார்க்**கும் என் நன்றி!

சேலியமேடு,<br>15—8—'56.

—**வாணிதாசன்**

# வாழ்த்துரை

மிக எளிய நடை - 'தமிழச்சி'யில் முதன்மையாகப் பாராட்டக் கூடியது அதுதான்! மற்றும், காதல் முதலியவற்றைத் தம்முன்னிறுத்தி, அவற்றில் உள்ள உயிரை — அழகை — விளக்கித் தருகிறார்.

கதை சிற்றூர் சார்ந்தது; இனியது!

வாணிதாசன் தமிழ் நன்றாகப் படித்தவர்: அவரிடம் இனியும் இனிக்கும் இத்தகைய காவியங்களைத் தமிழ் மக்கள் எதிர்பார்க்க.

வாணிதாசன் வாழ்க!

—பாரதிதாசன்

# சிறப்புரை

பக்குவமாகக் காய்ச்சி எடுக்கப்பட்ட செந்தமிழ்த் தேந்தீம்பாகைக் கவிதை என்னும் வட்டிலிற் பெய்து அன்புடன் வழங்குகிறார் அருமை நண்பர் புதுவைக் கவிஞர் வாணிதாசன். நான் அதைச் சுவைத்துப் பார்த்தேன். அதன் தித்திப்பு என் உளமெலாம் ஏறி நின்று தெவிட்டா இன்பத்தை நினைக்குந்தோறும் அளித்து வருகிறது,

கவிஞர் வாணிதாசன் 'தமிழச்சி' என்னும் தனித் தமிழ்க் கவிதை மூலம் பெண் பெருந்தகையாள் ஒருத்தியை நம் முன் நிற்க வைக்கிறார். அவள் அடுப் பூதியே வாழும் அடுப்பங்கரைப் பெண்ணாகவோ, காம விளையாட்டுக்கள் புரிந்து திரியும் காமக் கிழத்தியாகவோ காட்சி யளிக்கவில்லை. வீழ்ச்சி யுற்ற தாய் நாட்டை — தன் நாட்டை — எழுச்சி யுற்றதாக ஆக்கும் சீரிய பொதுப்பணியில் ஈடுபடும் வீராங்கனையாகவே நம் முன் நடமாடுகிறாள்.

கனிந்த காதலுள்ளம், பிறர்மாட்டு நனி அன்பு, ஊரார்க் குழைக்கும் பண்பு, மூடப் பழக்க வழக்கங்களை முறியடிக்கும் துணிவு, பகுத்தறிவை மக்களுக்குப் புகட்டும் ஆர்வம், சேரியினைத் திருத்த முற்படும் முயற்சி, சாதிக் கட்டுப்பாடுகளை உடைத்தெறிய வெகுண்டெழும் எழுச்சி, ஏழை எளியவர்கள் உயர்நிலை யடைய வேண்டும் என்னும் அவா, தனி யுடைமையை மாய்த்துப் பொது வுடைமையைப் பூக்கச் செய்யும் கொள்கை, இன்பத்

திராவிடத்தைக் காணும் குறிக்கோள் ஆகிய இன்ன பிற தன்மைகள் எல்லாம் அவள்மாட்டுப் பொதிந்து கிடக்கின்றன. இத்தகைய மாண்புடைய 'தமிழச்சி'யைத்தான் கவிஞர் வாணிதாசனின் பேனாமுனை சொல்லோவியமாகத் திறம்படத் தீட்டிக் காட்டுகிறது.

இக் கவிதை ஒரு சமுதாய சீர்திருத்தக் கதையாகும். ...கதை இறுதி வரையில் விறுவிறுப்புடன் செல்கிறது. "சிற்றூர்ப் பெண்கள் திருந்தினால்தான் நாடு திருந்தும்" என்ற நோக்கத்தோடுதான் இக் கவிதை இயற்றப்படுவதாக ஆசிரியரே கூறியுள்ளார். அந் நோக்கம் இந் நூலின் கண் நன்கு நிறைவேற்றப்படுகிறது.

இயற்கையின் தோற்றத்தையும், அதன் எழிலையும் பற்றிக் கூறவரும் இடங்களில் எல்லாம் ஆசிரியர் மிக மிக அழகாகவும், நெஞ்சை யள்ளும் வகையிலும் தீட்டிக் காட்டுகிறார்.

கலையழகு ஆங்காங்குக் கொழித்துக் கிடக்கின்றது கவிஞர் கொடுக்கும் உவமைகள் புதுமையாகவும். பொருத்தமுள்ளனவாகவும் காணப்படுகின்றன.

"பொரியுண்டை எனஉம் முள்ளே
பெண்களை நினைத்தீர் போலும் !" (8),

"பொன்னனின் கருங்கல் தோளைத்
தமிழச்சி புரட்டிச் சொல்வாள் :" (52),

"......... ......... கள்ளின்
மொந்தைபோல் முகம்பா ழாக" (63),

"இருட்டிய வீடு போல
இருந்தனன் ...... ......" (69),

" ஊரார்கள் நம்மை எல்லாம்
உமிஎன நினைத்தார் போலும் !" (147)

என்பன போன்ற உவமை யழகுகள் கவிதையை அணி செய்கின்றன.

" இன்றைய நிலையை மாற்ற
இறப்பதா ? வேண்டாம் ; வேண்டாம் !
கொன்றிட வேண்டும் தீமை
குறுக்கிட்டால் ! எடடீ வாளை !" (26)

என்றும்,

" ............ ............ மூட
வெள்ளத்தை மீன்போல் பெண்கள்
எதிர்த்திடில் அடிமை எல்லாம்
தள்ளுண்டு போகும் ! ........." (30)

என்றும்,

" ......... பெண்விழித்தால்
விடுதலை நிலைக்கும் நாட்டில் !" (58)

என்றும், இவை போன்றும் கருத்துக்கள் சிந்தனைக்கு விருந்தென இனிமையூட்டி நிற்கின்றன.

கவிதை ஆற்றொழுக்குப் போல் தங்கு தடை இன்றித் தெள்ளிய தனித் தமிழ் நடையில் செல்லும் பாங்கு பெரிதும் போற்றற்குரிய தாகும்.

இந் நூல் இளைஞருலகம் விழிப்புணர்ச்சி பெற்று விட்டது என்பதற்கோர் எடுத்துக்காட்டு. தமிழர்கள் ' தமிழச்சி 'யைக் கண்டால், அவள்மாட்டுக் ' காதல் ' கொள்வார்கள் என்பது உறுதி. எனவே, வாழ்க ' தமிழச்சி ' ! வாழ்க கவிஞர் வாணிதாசன் !

1 - 9 - '48 }
சென்னை - 1. }

—இரா. நெடுஞ்செழியன்

## மாந்தர்

| | | |
|---|---|---|
| **தமிழச்சி** | — | *கதைத் தலைவி* |
| **பொன்னன்** | — | *தமிழச்சியின் காதலன்* |
| **பாப்பாத்தி** | — | *தமிழச்சியின் அண்டைவீட்டுப் பெண்* |
| **குப்பன்** | — | *பாப்பாத்தியின் முதற் காதலன்* |
| **மதுரை வீரன்** | — | *சேரிப் பறையன்* |

# தமிழச்சி

## இயல் 1

### காதலர் சந்திப்பு

---

**வா**னிடைத் தோன்றும் செம்மை
வளம்பெறப் பரிதி காலை
தாளெரு ஓவி யன்போல்
பொன்னிறம் தடவும்; ஆங்கே
ஏனெனை மறந்தாய் என்றே
எதிர்நின்று தடுக்கும் மேகம்;
கான்மலர் இவற்றைக் கண்டு
கைகொட்டி நகைத்து நிற்கும்! 1

மதகிடை நீர்பு குந்து
வாய்க்காலின் கரையை மோதும்;
ஒதுங்கியே நாணி நிற்கும்
மங்கையை ஒப்ப நாட்பூ;
வெதும்பிடும் அல்லி நோக்கி,
விண்நோக்கி முரல் பூக்கும்;
இதைப்பார்த்தாள் நீர்மொண் டேகத்
**தமிழச்சி** மறந்தே போனாள்! 2

ஏரினை வயல்நி றுத்தி
எழுந்தோடிப் **பொன்னன்** வந்தான் ;
வார்புனல் சிரித்து நிற்கும்
தாமரை மலரைக் கொய்தான் ;
பார்த்திட்டான் சுற்று முற்றும் ;
தமிழச்சி பக்கல் சார்ந்தான் ;
“ கார்குழற் கேற்ற திந்தா !
காதலின் பரி (சு)” என் றானே ! 3

தலைசாய்த்து நாணிக் கோணித்
தமிழச்சி நின்றி ருந்தாள் ;
“ கொலையெலாம் கற்ற உங்கள்
கூர்விழிக்(கு), அடடா ! சேலைப்
புலவர்கள் உவமை சொல்வார் ;
பொருத்தமோ ?” என்றான் ; வாய்க்கால்
அலையினைப் பார்த்த வண்ணம்
தமிழச்சி அசையாள் ஆனாள் ! 4

“ இலுப்பையைக் கோதும் செங்கண்
இன்னிசைக் குயிலும், இங்கே
உலுத்தநீள் மொட்டைத் தென்னைப்
பொந்தில்வாழ் கிளியும் உன்சொல்
பலகற்றுக் கொள்ளு மென்றே
பவளவாய் பூட்டி விட்டாய் ?
விலையிலா மணியே இஃது
விரிமனப் பண்போ ?” என்றான். 5

நீரலை பட்டுப் பட்டு
நின்றசைந் தாடு கின்ற
பேர்போன கும்ப கோணப்
பித்தளைக் குடமெ டுத்தாள் ;
நீரினைக் குனிந்து மொண்டாள் ;
நெடுமூச்சு விட்டாள் ; எங்கோ
பார்ப்பவள் போலக் கொல்லன்
பணையொக்கும் அவன்தோள் பார்த்தாள் ! 6

கண்ணினுல் செலவு கூறித்
தமிழச்சி கரையில் ஏற
எண்ணிடும் வேளை, பொன்னன்
இருகையால் வழிம றித்தான் !
" பெண்ணே ! நீ வாய்தி றந்து
பேசடி ! மணந்து வாழும்
எண்ணத்திற்(கு) என்சொல் கின்றுய் ?
பொறுத்தது போதும் !" என்றுன் 7

சிரித்திட்டாள் ; செப்ப லுற்றுள்
தமிழச்சி அவனைப் பார்த்தே :
"பொரியுண்டை எனஉம் மூளே
பெண்களை நினைத்தீர் போலும் !
இருநான்கு பொழுதிற் குள்என்
எண்ணத்தைக் கேட்க வந்தீர் ;
இருமூம்மைத் தீர ஆய்ந்(து)என்
எண்ணத்தை உரைப்பேன்" என்றுள். 8

## இயல் 2

# பாட்டியும் பேத்தியும்

---

அலைந்திடும் ; நீண்டு தொங்கும்
தலைப்பின்னல் அங்கும் இங்கும் !
கலகலப் போடு பெண்கள்
கையினால் குனிந்து தட்டி
மலைநாட்டுச் செங்கோல் வாழ்த்தித்
தனித்தமிழ் வாழ்த்து கின்றார் !
கலைமதி கும்மி கேட்டுக்
களிப்பொடு தவழும் வானில் ! 9

நாணலின் பூவை யொத்த
நரைமயிர்ப் பாட்டி இல்முன்
கோணிய முதுகைத் திண்ணைக்
குறுஞ்சுவர் மீது சாய்த்துக்
காணுவாள் சிறுவர் கும்மி
ஆட்டத்தைக் ; களிப்பாள் ; ஓடிப்
போனதன் இளமை எண்ணிப்
பொக்கைவாய் அசைப்பாள் அந்தோ ! 10

அவ்வேளை எங்கி ருந்தோ
தமிழச்சி அங்கு வந்தாள் ;
கவ்வையில் நீந்து கின்ற
பாட்டியின் காற்பு றத்தே
செவ்வையாய் மண்டி யிட்டுக்
குந்தினாள் ; சிரித்தாள் ! பாட்டி
'இவ்வேளை ஏற்ற(து)' என்றே
எண்ணினாள் ; சொல்ல லுற்றாள் : 11

"நம்இனப் பண்புக் கேற்ற
நடைஇல்லை உன்னி டத்தில் ;
இம்மியும் வீட டங்கி
இல்லைநீ ; வயதில் நாங்கள்
அம்மியைப் போலே வீட்டில்
இருந்தனம் ; அன்னை தந்தைக்(கு)
இம்மியும் மீறிப் பேசோம் ;
எதுவுரைத் தாலும் செய்வோம் ; 12

" 'பாரடி அந்தப் பெண்ணைப்
பழக்கிய வகையை' என்றும்,
'ஆரிடம் வாழ்வாள் அன்னாள்
அவள்வாயால் அடடா' என்றும்
ஊரினில் உன்னைப் பற்றிப்
பேசாதார் ஒருவர் இல்லை ;
கார்கால மயிலே ! என்சொல்
கடைப்பிடி ; அடங்(கு) !" என் றாளே ! 13

பாட்டியைத் தளிர்க்கை யாலே
தமிழச்சி பற்றிச் சொல்வாள்:
“ஆட்டிட ஆடு கின்ற
பாவைநான் அல்லள்; சற்றுப்
பாட்டையில் நடந்தால் என்ன?
பலருடன் பழகிப் பேசி
வீட்டிற்கு வந்தால் என்ன?
விழிப்புண்டு கற்பில்; பாட்டி! 14

“வேலையை முடித்த பின்னர்
வீட்டினில் பெண்கள் நல்ல
கோலங்கள் போட வேண்டும்;
குழந்தைக்கு நல்ல நல்ல
நூலினால் சட்டை தைக்க,
நூற்றிடப் பழக வேண்டும்;
மேலான கதைகள் சொல்லிச்
சிறுவரை வளர்க்க வேண்டும்; 15

“மாலையில் சிறிது நேரம்
மயில்போல உலவ வேண்டும்;
பாலினைக் கறக்கக், காய்ச்ச,
உறையிடப் பழக வேண்டும்;
ஏலவே இவைசெய் யாரேல்
என்பயன் பெண்க ளாலே?
நாலுபேர் நகைக்கத் தக்க
செயல்செய்து கெடுதல் நன்றோ? 16

“அவரவர் தாமே தம்மை
அரண்செய்து காத்தால் கற்புத்
தவறுமோ? இடைக்கா லத்தே
தமிழர்கள் பெண்ணைக் குட்டிச்
சுவரினும் கீழாய் எண்ணி
அடிமையாம் குழியிற் சேர்த்தார்;
அவர்கூறு மனத்திற் கேற்ப
ஆக்கினார் புராணக் குப்பை! 17

“ஓட்டையைப் போலப் பெண்ணை
ஒதுக்கினார்; அன்னார் நாண
நாட்டினில், படிப்பில், போரில்,
நல்லறப் பண்பில் வன்மை
காட்டிட வேண்டும்!” என்றாள்.
“கலிகாலக் கொடுமை” என்று
கேட்டுநின் றிருந்த தாயும்
கிழவியும் கூச்சல் போட்டார்! 18

## இயல் 3

# தமிழச்சியின் உறுதிமொழி

இருளினை உண்ணக் கீழ்வான்
கதிரவன் எழுந்தான்! சேவல்
குரல்காட்டி அவனை வாழ்த்தும்;
கூட்டினில் இருந்தே சிட்டு
'வருகநீ! வருக!' என்னும்;
மகிழ்முகம் காட்டி ஊரின்
அருகுள்ள தென்னந் தோப்பில்
காக்கைகள் கரைந்தழைக்கும்! 19

ஓடையில், குளத்தில், அந்த
ஊருள்ள புதரில், தோப்பில்
வாடையின் மோதலாலே
மலர்விழி திறக்கும்! கண்கள்
மூடிய இமைதிறந்தாள்
தமிழச்சி! மொய்க்கும் வண்டு
பாடிவந் தவள்கண் மேலே
ஏமாறிப் பறந்து மீளும்! 20

தாழினை நீக்கித் தோட்டம்
தமிழச்சி வந்தாள்; பந்தர்
தாழ்ந்துபூத் தலைய சைக்கும்
சம்பங்கி முல்லை கொய்தாள்;
ஆழத்துக் கிணற்று நீரை
அடுக்களை நிறைத்தாள்; தோட்ட
வாழைதெங் கிற்கு நீரை
வார்த்திட்டாள்! அந்த வேளை, 21

பக்கத்து வீட்டுக் குள்ளப்
**பாப்பாத்தி** வந்தாள்; சொல்வாள்:
“பொக்கைவாய்க் கிழவன் கையில்
பொருளுண்டாம்; அதனால் என்னை
அக்கிழ வனுக்குத் தள்ளத்
தாய்தந்தை ஆர்ப்ப ரித்தார்;
திக்கற்று நிற்கின் றேன்நான்!
இதற்கென்ன செய்வ(து)?” என்றாள். 22

“இன்னும்நா விரண்டு நாளில்
திருமண மாமெ னக்கே
‘பொன்,மணி எல்லாம் உன்றன்
போக்கின்போல் அழிக்க லாம்;பின்
என்னேடி குறை(வு)உ னக்கங் (கு)?’
என்கின்றாள் கொடிய அன்னை;
என்காதல் உரைத்தேன்; ‘சீச்சி!
போடிபோ!’ என்றிட் டாளே! 23

“தந்தையும் அன்னை கேற்பச்
‘சரி’யென்று பாடு கின்றார்;
சொந்தமும் பணமும் கண்டா
நெஞ்சத்தில் காதல் தோன்றும்?
என்றனக் குரிய காதல்
துணைவனை அடையே னாகில்
இந்தநற் குவளை தின்றே
இறந்தொழிந் திடுவேன்!” என்றாள். 24

இவையெலாம் கேட்டி ருந்த
தமிழச்சி சிரித்துச் சொல்வாள்:
“சுவையிலா வாழ்வில் உன்னைத்
தூர்த்திட நினைத்தாள் உன்தாய்;
அவளினும் அறிவில் லாத
பேதைநீ! அதனால் அன்றோ
குவளையைத் தின்(று)இ றக்கத்
துணிந்தனை! தமிழப் பெண்ணே! 25

“ஒன்றுநான் சொல்வ தைக்கேள்:
உயிருடல் அவனுக் காக
அன்றுநீ கொடுத்தேன் என்றாய்;
அதிலுனக் குரிமை இல்லை;
இன்றைய நிலையை மாற்ற
இறப்பதா? வேண்டாம்! வேண்டாம்!
கொன்றிட வேண்டும் தீமை
குறுக்கிட்டால்! எட்டீ வாளை! 26

"'நீண்டநாள் செய்தி மன்றல்;
நீர்குறுக் கிடாதீர்!' என்றே
வேண்டிய மட்டும் நீயே
விளக்கமாய்த் தாய்தந் தைக்குத்
தோன்றிடச் சொல்வாய்; உன்றன்
துயர்சொல்வாய்; கேளா விட்டால்
மீண்டிடு வீட்டை விட்டே!''
என்றனள் தமிழ மின்னாள். 27

"எப்படித் தந்தை தாயை
இழந்துநான் செல்வேன்? ஊரார்
செப்பிடு பழியேற் பேனோ?
திக்கற்றுப் போமே; அன்பால்
கப்பிய **குப்பன்** ஊரைக்
கடந்துபட் டாளம் சென்றான்!
எப்படி எதிர்ப்பேன்? ஒன்றும்
இயலா(து)'' என்றாள்பாப் பாத்தி. 28

பாப்பாத்தி கையி ரண்டும்
தமிழச்சி பற்றிச் சொல்வாள்:
"காப்பாற்று வேன்நான் உன்னைக்;
கலங்காதே கோழைப் பெண்ணே!
சாப்பிடப் பிறந்த தன்றித்
தன்மானம், உரிமை காவாப்
பாப்பாக்க ளாலே பெண்கள்
பாழானார்; அடிமை யானார்! 29

"உள்ளத்தே நினைப்பார்; சொல்வார்
நம்நாட்டார்; ஊறு செய்யும்
பள்ளத்தைத் தூர்க்க ஏனோ
பயந்தோடி மறைவார்; மூட
வெள்ளத்தை மீன்போல் பெண்கள்
எதிர்த்திடில் அடிமை எல்லாம்
தள்ளுண்டு போகும்; தூய
தமிழ்ப்பண்பு தழைக்கும் அன்றோ? 30

"உன்னரும் சுற்றத் தார்கள்
ஒன்றாகச் சேர்ந்து சாதி
தன்னிலே விலக்கி விட்டால்,
தமிழகம் உள்ளங் கையோ?
தன்னரும் கற்பைக் காத்தல்
தமிழ்ப்பெண்கள் கடமை யாகும்;
என்னடி கலங்கு கின்றாய்?
எதிர்த்திட எடடீ வாளை!" 31

## இயல் 4

# சேரியில் சீர்திருத்தம்

சேரியின் முடக்கில் மூன்று
செங்கல்லை நட்டு வைத்த
மாரியின் கோயி லண்டை
தமிழச்சி வந்தாள்; "உங்கள்
ஊரினைச் சீர்தி ருத்த
நினைக்கின்றேன்; உங்கட் குள்ளே
ஆரேனும் இருவர் வாரீர்!
அறப்பணி செய்வோம்!" என்றாள். 32

மானமே உயிராய் வாழும்
தமிழர்தம் வழியில் வந்தோன்,
'நான்' என ஒருவன் வந்தான்
கூட்டத்தின் நடுவி ருந்து;
"வானிடி எதிர்த்திட் டாலும்,
மலைகடல் குறுக்கிட் டாலும்
நானென்றன் சேரிக் காக
நல்குவன் உயிரை!" என்றான். 33

சிங்கத்தின் உயர்ந்த நோக்கான் ;
திரண்டுருண் டிட்ட தோளான் ;
மங்கையர் துயில எண்ணும்
விரிந்துமுன் எழுந்த மார்பன் ;
கங்குலின் நிறத்தான் ; 'சேரிக்
காளை'யென் கின்ற பேரால்
அங்குளோர் அழைப்பர் ; ஆனல்,
அவன்பெயர் **மதுரை வீரன் !** 34

ஒருசிலர், "வேண்டாம் அம்மா !
ஒவ்வாதிச். செய்கை !" என்பார் ;
ஒருசிலர், "ஊரார் கேட்டால்
வந்திடும் மோசம் !" என்பார் ;
"வரப்புகள் கீழ்மே லென்றிங்(கு)
ஈசனே வகுத்தி ருக்கச்
சரியிலை உங்கள் எண்ணம் ;
சரியில்லை !" என்றார் சில்லோர். 35.

ஒருகிழம், "பறையர்க் கேனோ
ஒழுக்கம்நன் னடைகள் ?" என்னும் ;
ஒருகிழம், "மாரி சீற்றத்
துட்பட்டுச் சாவோம் !" என்னும் ;
ஒருகிழம், "கஞ்சி இல்லை !
உதவாது திருத்தம் !" என்னும் ;
ஒருகிழம், "சேரிக்(கு) ஏதோ
கெட்டநாள் !" என்று ரைக்கும். 36

தட்டாது சேரிப் பேச்சைத்
தமிழச்சி கேட்டி ருந்தாள் ;
வட்டமாய்த் தன்னைச் சூழ்ந்த
மக்களைப் பரிவாய் நோக்கிக்,
" கெட்டதை உங்கட் காகக்
கிஞ்சிற்றும் நினைக்க மாட்டேன் ;
சட்டதிட் டங்க ளல்ல ;
சற்றென்சொற் கேட்பீர் !" என்றாள் : 37

" கல்லின்கீழ்ச் செடியைப் போலக்
காலத்தைக் கடத்தி விட்டீர் !
செல்வத்தை ஆண்டான் துய்க்க
வயலினில் உழைத்தீர் ; தேய்ந்தீர் !
செல்வத்தை ஆக்கு வோர்கள்
தீராத பசியில் வாடல்
நல்லதோ ? எண்ணிப் பாரீர் !
நலிவெலாம் உமக்கே தோன்றும் ! 38

" சேரியைத் திரும்பிப் பாரீர் !
குடிசையில் தெரியும் வானம் !
சேரிக்கு நல்ல தண்ணீர்க்
கிணறுண்டா ? சிந்தி யுங்கள் !
மாரிக்குக் கோயில் கண்டீர் !
மண்விளக்(கு) அங்கொன் றுண்டா ?
ஊருக்கு நீங்கள் போகும்
பாட்டைதான் ஒழுங்கா ? சொல்வீர் ! 39

மண்ணினில் புழுதி யாக
வாழ்கின்றார் உங்கள் மக்கள் ;
கண்கொண்டு பார்க்கின் றீர்கள் ;
கழுவிய காலம் உண்டா ?
எண்ணெயைத் தடவி உங்கள்
தலைவாரி முடித்த துண்டா ?
கண்பெற்றும் குருட ராகி
வாழ்வதைக் கடிய வேண்டும் ! 40

" ஒதியனின் நீழல் தன்னில்
ஒருபள்ளிக் கூடம் கட்டி
முதியவர் படிக்க வேண்டும்
முன்னவர் கதைக ளெல்லாம் ;
முதியவர் தங்க ளின்கான்
முளைகளைக் கல்வி கற்க
அதிகாலை அனுப்ப வேண்டும் ;
அச்சத்தை மாற்ற வேண்டும் ! 41

" உங்களுக் குள்ளே கட்டாய்
ஒவ்வொரு வீட்டுக் காகப்
பங்குகள் போட வேண்டும் ;
பழுதுகள் பார்க்க வேண்டும் ;
திங்களில் சேரி யுள்ளோர்
யாவரும் ஒருநாள் கூடி
இங்குள்ள குறையை நீக்க
இயன்றதைச் செய்ய வேண்டும் ! 42

“படித்திட வேண்டும் நீங்கள்;
பலதொழில் உணர வேண்டும்;
படித்திடில் உணவுப் பஞ்சம்
படிப்படி யாக நீங்கும்;
படித்திடில் ‘சாதி’ப் பேச்சுப்
பறந்திடும்; அறிவும் உண்டாம்;
படித்திடில் ‘அடிமை ஆண்டான்’
எனும்பேச்சும் பறக்கும் அன்றோ? 43

“கொடுமையைக் கண்டால் ஆண்பெண்
குறுக்கிட வேண்டும் கூட்டாய்;
நடுநிலை மனத்த ராகி
நன்றுதீ(து) உணர வேண்டும்;
உடையவர் இல்லார் என்ற
ஒருபேச்சுக்(கு) இடமில் லாது
குடியினைச் செய்து சேரிக்
குழுவொன்றாய் வாழ வேண்டும்! 44

“இவைகளே சீர்தி ருத்தம்!
இதிலென்ன பிழைநீர் கண்டீர்?
பகைவரை எதிர்ப்ப தற்கும்,
பண்பொடு வாழ்வ தற்கும்,
இவைவேண்டும்; ஊரார் எல்லாம்
இதிலொன்றும் பிழையே காணார்;
சுமைவேண்டாம் உங்க ளுக்குத்;
தொண்டுநான் செய்வேன்!” என்றாள். 45

“சரி”யென்றார் சேரி மக்கள்!
தமிழச்சி முனைந்து விட்டாள்!
“நரியர்கள் சூழ்ச்சி மாயும்;
நம்மவர் வாழ்வார்!” என்றே
உரைத்திட்டான் மதுரை வீரன்;
உடன்பணி ஆற்று கின்றான்!
உருப்பெற்றுத் திராவி டந்தான்
உடன்மாறும் காலம் கண்டோம்! 46

இயல் 5

## பொன்னன் ஒப்புக்கொண்டான்

புல்லினை மடிக்கும் தென்றல் ;
பொன்னிறம் மாலை சிந்த,
நல்லபாம் பெனநெ ளிந்து
நழுவிடும் ஓடை ; கூழாங்
கல்லிடைச் சலச லக்கும் ;
காக்கைகள் கூட்ட மாக
மெல்லுடல் கோதி நீரில்
விளையாடி உடல்கு ளிக்கும் ! 47

சிரித்திடும் ஆம்பல் ; சோங்கிச்
சிணுங்கிடும் முளரி ; நாரை
விரித்தொரு சிறகை நீட்டிச்
சோம்பலை முறிக்கும் ; மீன்கள்
கருத்தினை இழந்து வானைக்
கடலென்று பாயும் ; தென்னங்
குருத்தோலை படப டக்கும் ;
குலுக்கெனச் சிரிக்கும் கிள்ளை ! 48

ஓடையின் மருங்கி ருக்கும்
நாணலின் ஓர மாகப்
பேடையைக் காணுங் கோழி
பின்னிருந் தழைக்கப் பொன்னன்
சாடையாய்ப் பார்த்தான்; ஆங்கே
தமிழச்சி வந்து சேர்ந்தாள்;
"ஏடிஇந் நேரம்?" என்றான்.
"இடைவழி கோணல்!" என்றாள். 49

மடியினில் இருந்த முல்லை
மாலையை எடுத்தான் பொன்னன்;
"நெடியவேல் விழியாய்! சற்றே
நில்!" என்றான்; பரிதி வாழ்த்தித்
தொடையலை அவள்க ழுத்தில்
சூட்டினான்! தோள்கள் விம்மக்
கடைக்கணித் தாள்;சி ரித்தாள்!
கலந்தன இரண்டு நெஞ்சம்! 50

ஓடைநீர் புல்லில் பாயும்
ஓசையும் இனிது கேட்கும்;
வாடையில் தோய்ந்த தென்றல்
வண்டிசை கொணரும்! அங்கே
ஆடையை இழுத்துப் போர்த்தும்
அன்னத்தைப் பொன்னன் நோக்கி,
"ஏடி!நீ பேச வில்லை?
எதைநினைக் கின்றாய்?" என்றான். 51

பொன்னனின் கருங்கல் தோளைத்
தமிழச்சி புரட்டிச் சொல்வாள்:
"என்னரும் தமிழ்நாட் டுள்ளோர்
பெண்களை இழிவாய் எண்ணும்
சின்னபுத் தியைநான் மாற்றத்
துணிந்தனன்; செய்தி கேளாய்!
உன்னாலே ஒருபெண் மூட
உலகெதிர்த் திடமுன் வந்தாள். 52

"சாவடி, அறக்கூழ்ச் சாலை
கட்டுவார் தமிழர்; நாட்டில்
மேவிய அடிமை, மூட
விளைவெலாம் நீக்க எண்ணார்;
வாவியின் மலரை மானும்
பெண்களின் அடிமை மாற்ற
ஆவன செய்யார்; இன்னோர்
அறப்பண்பைப நான்நி னைத்தேன். 53

"பக்கத்து வீட்டுக் குள்ளப்
பாப்பாத்தி சிலநா ளாகத்
திக்கிலா(து) அழுத கண்ணும்,
சிந்திய மூக்கு மாக
மக்கிவாழ் கின்றாள்; பேதை!
வாழ்வைஅக் கிழவன் கையில்
சிக்கிடா வகைநீர் நாளை
செய்திட வேண்டும்!" என்றாள். 54

"பழிவந்து சேரும் பெண்ணே!
பலர்எனை நகைப்பார்; மற்றும்
இழிவாக, அந்தோ! அந்த
இளங்கொடி யாளை ஊரார்
மொழிவார்கள்; கதைப்பார்; தீர
முன்பின்னே எண்ணி ஒன்றில்
இழிந்திட வேண்டும்; வீணே
இதில்தலை யிடாதே!" என்றான். 55

பொன்னனின் அணைப்பாம் பூட்டைத்
தமிழச்சி உடைத்தெ றிந்தாள்;
முன்வந்தாள்; எதிரில் நின்றாள்:
"மூவேந்தர் ஆண்ட நாட்டில்
உன்போன்ற கோழை யாலே
உளுத்தது பெண்ணி னந்தான்;
பின்னொரு முறையும் முன்போல்
பேசாதே! வெட்கம்; வெட்கம்! 56

"நல்லதைச் செய்வ தற்கு
நடுக்கமேன்? வீணர் கூட்டம்
சொல்வதற் கஞ்சி வாழ்ந்தால்
துயர்போமோ? அடிமை போமோ?
நல்லற மாமோ காதல்
நடமாடா மன்றல்? பெண்கள்
அல்லலை நீக்க என்றும்
அஞ்சாதே! விரைக இன்னே! 57

"கட்டாயப் படுத்திப் பெண்ணைக்
கடிமணம் செய்து வைக்கும்
கெட்டதைத் தடுத்தல் மிக்க
கெடுதலோ? கொள்ளி கொண்டு
சுட்டாலும் அஞ்சேல்! ஏலாச்
சொல்லெலாம் பறக்கக் காற்றில்
விட்டிடு; பெண்வி ழித்தால்
விடுதலை நிலைக்கும் நாட்டில்!" 58

என்றனள். பொன்னன், "உன்றன்
இச்சைபோல் ஆகும்!" என்றான்.
குன்றினில் மறைந்து மேல்வான்
கொளுத்தினான் பரிதி! பொன்னன்,
"சென்றுநான் வரவோ?" என்றான்.
தமிழச்சி சிரித்தாள். கண்கள்
ஒன்றினை ஒன்று விட்டுப்
பிரியாது தவித்து நின்றார்! 59

## இயல் 6

# பெண் கேட்க வந்தார்கள்

---

தமிழச்சி வீட்டில் இன்று
தடபுடல்; பொரியல் நாற்றம்
கமழும்;பெண் கேட்க இன்று
வருபவர் கால லம்ப
அமியோரம் இருந்த அண்டா
நிரப்பினாள் அன்னை; குப்பை
உமியினைக் கூட்டி வாரி
உட்காரப் பாய்வி ரித்தாள். 60

சுருள்பாக்கு, வில்வ நல்லூர்
பச்சைவெற் றிலை,சுண் ணாம்பு,
மருநிறை தூள்கள் யாவும்
வைத்தனள்; தன்வீட் டிற்கு
வருகின்ற புதுச்சம் பந்தி
வழிபார்க்க, அடடா! அன்னை,
தெருவிற்கும் வாச லுக்கும்
நடந்ததைச் செப்பப் போமோ! 61

"தலைவாரிக் கொள்வாய்; நல்ல
தாவணி கட்டு; வேடன்
சிலைநிகர் புருவம் மையால்
தீட்டடி!" என்றாள் அன்னை.
தலையினை ஒடிப்பாள் போலத்
தமிழச்சி முகந்தி ரும்பி,
"மலைவய லாக மாறும்;
என்மனம் மாறு(து)!" என்றாள். 62

தந்தையின் 'வாங்க' என்னும்
குரலினைக் கேட்டுக் கள்ளின்
மொந்தைபோல் முகமபா ழாகத்
தமிழச்சி ஒளிந்து நின்றாள்.
வந்தஆண் பெண்கட்(கு) எல்லாம்
வரிசையாய் நீரை மொண்டு
தந்தனள் அன்னை; வந்தோர்
சாப்பிட இலைவி ரித்தாள். 63

வந்தவர் ஊரில் கண்ட
வளப்பத்தைப் பேசி உண்டார்;
முந்திய முறையைச் சொன்னார்;
முப்பாட்டன் வகையைச் சொன்னார்;
இந்தநற் சம்பந் தத்தால்
ஏற்படும் பயனைச் சொன்னார்;
சந்தைப்போ கிடைக்கும் என்று
தமிழச்சி காத்தி ருந்தாள்! 64

அண்டையில் - அயலில் - வாழ்வோர்,
அவ்வூர்நாட் டாண்மைக் காரர்
உண்டியை இடித்த பின்னர்
உட்கார்ந்தார்! "பெண்ணுக் காகச்
சண்டையின் வேண்டாம்; இன்றே
தருவதை விளக்க மாக
விண்டிட வேண்டும்!" என்றார்
பெண்கேட்க விரும்பி வந்தார். 65

"நமக்குள்ளே குணம்கு லத்தை
நாம்பார்க்கப் போவ தில்லை;
தமக்கையின் மகனுக்(கு) இங்குத்
தடங்கலோ? வரிசை எல்லாம்
உமக்குநான் சரியாய்ச் செய்வேன்!"
என்றனன் தந்தை; "உம்சொல்
சுமந்திட நானி ருக்கத்
துயரேனோ?" என்றாள் அன்னை. 66

"மாப்பிள்ளை சொல்லு கின்றான்;
வந்ததாம் கடிதம் நேற்று;
'காப்புநா லாறு பொன்னில்;
கழுத்துச்சங் கிலிமூ வாறு;
சாப்பிடக் - கைய லம்ப -
வெள்ளியில் தட்டு முட்டு;
மாப்பிள்ளை விரலுக் கேற்ற
மோதிரம் வயிரக் கல்லில்! 67

"'பின்னுமே தேதோ' வென்று
பேசினன். எங்க ளுக்கோ
என்னவந் தாலும் அந்தப்
பெண்ணின்மேல் விருப்பம் இல்லை;
'முன்னுள்ள உறவு போகும்'
என்பதால் முனைந்து வந்தோம்''
என்றொரு குண்டு போட்டாள்
பிள்ளையை ஈன்ற அன்னை! 68

'இருப்பதை விற்றிட் டாலும்
இவர்சொல்லும் தொகைக்குச் சொத்துச்
சரிப்பட்டுப் போகா(து)' என்று
தமிழச்சி தந்தை எண்ணி
இருட்டிய வீடு போல
இருந்தனன்; பெண்ணைப் பெற்றாள்,
"ஒரேஒரு பெண்ண மக்குத்!
தயங்காதே! 'ஊம்'கொ(டு)!'' என்றாள். 69

செழியனின் நேரிற் பண்டு
சென்றபத் தினிப்பெண் போல
விழியினில் தீப்ப றக்கத்
தமிழச்சி வெளியில் வந்தாள்:
"கழியறி வுடையீர்! என்னைக்
கலந்திடா(து) அன்னை, தந்தை
மொழிந்தனர் வாக்(கு) உ மக்கு;
முடிவுவே றாகும் சொன்னேன்; 70

"இன்பமாய் என்றும் வாழ,
இல்லறம் இனிது பேண
அன்பன்றோ வேண்டும்? என்றன்
நெஞ்சினில் அதுதான் இல்லை;
என்மனம் கொள்ளை கொண்டான்
இருக்கின்றான்; அவனை யன்றி
மூன்றாண்ட மூவேந் தர்கள்
முளைத்தாலும் விழையேன்!" என்றாள். 71

## இயல் 7

### ஊராரின் முறையீடு

---

நாட்டாண்மைக் காரர் தேடி
நாலுபேர் வந்தார் : " ஐயா !
கேட்டீரா செய்தி ? சேரி
கெட்டிடும் போலும் இங்கே !
கூட்டமாய்ப் பேசு கின்றார் !
குடிப்பதை நிறுத்தி னாராம் !
ஏட்டினைப் படிக்கின் றாராம் !
ஏதேதோ செய்கின் றாராம் ! 72

" காலையில் முழுக்குப், பூசை,
கதிரவன் வணக்கம், தங்கள்
சீலைகள் தோய்த்துக் கட்டல்,
சிறுவர்க்குத் தலையை வாரிச்
சாலைக்குக் கல்வி கற்கத்
தப்பாது விடுத்துப் பின்னர்க்
கூலிக்குப் போவ(து) என்ற
கொள்கையில் நடக்கின் றாராம் ! 73

“முதலியார் வீட்டுப் பெண்ணாள்
தமிழச்சி முனைந்த வர்க்கு
விதவித மாக ஏதோ
விளக்கங்கள் செய்கின் றாளாம்!
கதைபல சொல்கின் றாளாம்!
கல்விகற் பிக்கின் றாளாம்!
இதுவென்ன கொடுமை ஐயா?
இப்போதே கிள்ள வேண்டும்! 74

“‘கூலியை உயர்த்திக் கேட்போம்;
கொடுத்திட மறுத்தால், யாரும்
வேலைக்குப் போக மாட்டோம்;
வீரன்சொல் கேட்போம்!’ என்று
மாலையில் கூட்டம் போட்டு
வாக்குகள் கொடுத்திட் டாராம்!
காலத்தைத் தாழ்த்த வேண்டாம்;
கவனிக்க வேண்டும்!” என்றார். 75

நாட்டாண்மைக் காரர் சொல்வார்:
“நாமதில் நேரே சென்று
மாட்டக்கூ டாது; சற்று
மறைவாகக் காலம் நோக்கித்
தீட்டிட வேண்டும்! வேறு
செய்வதில் பயனே இல்லை!
வாட்டத்தைப் போக்கிக் கொள்வீர்!
வருமொரு நல்ல காலம்! 76

“ கண்டித்துப் பார்த்தேன் நானும் ;
கவனிக்க வில்லை சேரி ;
‘ பண்டிகைக் காக நாங்கள்
படிக்கிறோம் தெருக்கூத்(து)’ என்று
நொண்டிச்சாக்(கு) உரைக்கின் றார்கள் ;
நுணுக்கமாய்த் தெரிந்து கொண்டு
சண்டிசெய் யாது விட்டேன் ;
காலமோ சரியாய் இல்லை ! 77

“ ‘தமிழச்சி இவைகட்(கு) எல்லாம்
தலை’என்று கேள்விப் பட்டேன் ;
‘ உமைச்சும்மா விடவே மாட்டேன் ;
உன்மகள் கொட்ட மெல்லாம்
சுமையாக வந்து சேரும் ’
என்றுநான் கடிந்து சொன்னேன் ;
‘ எமக்கவள் அடங்காள் ! ஊரார்
அடக்கட்டும் !’ என்றான் பெற்றோன். 78

“ தமிழச்சி சொல்லைச் சேரி
தட்டாதாம் ! அதனால் நாமோ
அமைதியாய்க் கொக்கைப் போல
அசையாது காலம் பார்ப்போம் ;
நமைவாட்டும் இந்தக் காலம்
நலியும்நாள் தொலைவில் இல்லை ;
இமயம்போல் வலிவுண்(டு) ” என்றார்.
வந்தவர் எழுந்தே போனார் ! 79

## இயல் 8

# பொன்னன்மேல் பழி

கொற்கைமுன் குளித்த முத்தை
இலைத்தட்டில் கொட்டி ஏந்திச்
சுற்றிலும் உள்ள தென்னை
மரங்களைத் தவளை கூவி
விற்றிடும்; தாம ரைப்பூ
விலைபேசும்; குடிதண் ணீர்க்குச்
சுற்றுவட் டார மெல்லாம்
பேர்போன குளத்தில், காலை— 80

குடத்தினை இடையில் சேர்த்துக்
குடிதண்ணீர் மொள்ளப் பெண்கள்
நடக்கின்றார் வலக்கை வீசி;
நல்லிசை சிலம்பு மீட்டும்;
படித்துறை எங்கும் வட்ட
மதிக்கூட்டம்; பசுங்கிள் ளைகள்
அடங்கிடும் இன்சொல் கேட்க!
உலகினில் அடங்கார் யாரே? 81

ஊரிடை உள்ள அந்தக்
குளம்நோக்கி ஒருத்தி வந்தாள் ;
" ஆருக்கும் இதைச்சொல் லாதே !
பாப்பாத்தி, அன்னை தந்தை
பேரினைக் கெடுத்து விட்டாள் ;
பொன்னனின் பின்னே எங்கோ
ஊரைவிட்(டு) ஓடி விட்டாள் !"
என்றொரு செய்தி சொன்னாள். 82

ஊரினில் இந்தச் செய்தி
ஒருநொடிப் பொழுதில் அவ்வூர்
ஏரிக்குப் புதுநீர் போல
எட்டிற்று ; தெருமு டக்கில்
சேர்ந்தனர் வீணர் ; " இந்தச்
சிறுமியின் கொழுப்(பு)அ டக்க
ஓர்ந்திட வேண்டும் ; இன்றேல்,
உலகமே கெடும் !" என் றார்கள். 83

'பெண்களை விருப்பம் போல
விடுவதே பிசகு ! நேற்று
மண்மேட்டின் ஓர மாக
மாலையில் பொன்ன னோடு
பெண்ணவள் இருந்தாள் !' என்றும்,
'பேழையைக் கொடுத்தாள் !' என்றும்
உண்மையில் கண்ட வர்போல்
உதறினார் ஒருவர் மூட்டை ! 84

கடுஞ்சினம் குழிவி ழுந்த
கண்கக்கக் கிழவர் வந்தார் ;
தடியினை ஊன்றி நின்றார் ;
"தம்பிகாள் ! 'பெண்க ளுக்கோ
விடுதலை வேண்டும்' என்றே
வீணர்கள் கூவு கின்றார் ;
இடங்கொடுத் திடுவோ மானால்,
இழிவுகள் மலிந்தே போகும் ! 85

"அடிமையாய் வாழும் போதே
பெற்றோருக்(கு) அடங்கா தாரோ
தடியனும் ஒருவ னோடு
தனிவழி போம்பெண் கட்கு
விடுதலை ! விடுத லையாம் !
மிகுநன்று ! பெண்கள் நாட்டில்
கொடியவர் ; மீற விட்டால்,
குடிகெடுத் திடுவர் !" என்றார். 86

சிவப்பழம் ஒருவர் வந்தார் ;
திருமாலின் அடிமை வந்தார் ;
அவரவர் கடவுள் வாழ்த்தி,
அங்குள்ள கும்பல் நோக்கி,
"இவர்களால் ஊரி லுள்ள
எல்லோரும் கெட்டுப் போவார் ;
தவறிய ஆண்பெண் கைகால்
தறித்திட வேண்டும் !" என்றார். 87

இதற்குள்ளே அண்டை ஊரில்
இருப்பதாய் அங்கு வந்த
முதலியார் ஒருவர் சொன்னார்;
முன்கோபர் சிலர்து டித்தார்;
விதவித மான இந்த
வேடிக்கை யான கூத்தைக்
கதவோரம் கண்கொட் டாது
தமிழச்சி பார்த்தி ருந்தாள். 88

முதியநாட் டாண்மைக் காரர்
மூத்ததன் மகனைக் கூவி,
"இதுதானா உனக்கு வேலை?
எழுந்துபோ வயலுக்(கு)!" என்றார்;
"விதிப்படி நடக்கும் யாவும்!
வீணாகக் கும்பல் கூடி
எதற்காகப் பேசு கின்றீர்?
போவீர்கள்!" என்றார்; போனார்! 89

காசினைக் கழைக்கூத் தாடி
கைநீட்டிக் கேட்கும் போது
பேசாது போவார் போலே
வீராப்புப் பேசி நின்றார்;
ஓசைகாட் டாது நீங்கி
ஒருவர்பின் ஒருவர் போனார்!
பேசுவார்; வினைமு டிக்கப்
பின்செல்வார்; முன்போ காரே! 90

## இயல் 9

# குப்பன் வந்தான்

**கா**ரியம் தீர்ந்த போது
கைவிடும் கயவர் போலப்
போரெலாம் ஓய்ந்த பின்பு
பட்டாளம் போய்உ ழைத்த
சீர்மிகு தமிழர்க் கெல்லாம்
தித்திப்பை நாவில் பூசி,
'ஊருக்குச் செல்க!' என்னும்
உத்தர விட்டார் ஆங்கே! 91

குப்பனும் மற்ற வர்போல்
கூடார வாழ்க்கை விட்டுத்
தொப்பி,கால் சட்டை யோடு
மேல்நாட்டுத் துரையைப் போலே
அப்பன்,அம் மையி ருக்கும்
அவன்சொந்த ஊரை நோக்கிக்
கப்பலில் வந்து சேர்ந்தான்
கைப்பெட்டி, படுக்கை யோடே! 92

அப்பனுக்(கு) இரண்டு வேட்டி,
அன்னைக்குச் சேலை ஒன்று,
செப்பினில் வார்த்தெ டுத்த
சிலையொத்த பாப்பாத் திக்குக்
கொப்பொன்று சீட்டிச் சேலை,
குங்குமப் பெட்டி ஒன்று
கப்பலை விட்டி றங்கி
வாங்கினான் கடையில்; பின்னும்— 93

மலைவாழைச் சீப்பு நாலு,
மாம்பழம் நாலி ரண்டு,
கலைக்குறி மூங்கிற் காம்பு,
கைக்குடை, சோப்புச், சீப்புத்,
தலைமயிர்க்(கு) எண்ணெய், சின்ன
தம்பிக்குத் தொடுதோல், சட்டை
விலைபேசி வாங்கிக் கொண்டான்;
புறப்பட்டான் வீட்டை நோக்கி. 94

வழியினில் காணு கின்ற
மரமெலாம் அவளைக் காட்டும்;
சுழித்தோடும் ஆற்றுத் தண்ணீர்
அவள்கன்னச் சுழியைக் காட்டும்;
அழகிய கண்கள் வீச்சை
அவ்வாற்றுச் சேல்கள் காட்டும்;
விழிநகை நீலம் அல்லி
மேனியைத் தளிர்கள் காட்டும்! 95

இவையெல்லாம் கண்டு குப்பன்
'என(து)இன்பக் காத லிக்குச்
சுவைபடப் பட்டா ளத்தே
வாழ்ந்ததைச் சொல்வேன்; பின்னர்
அவள்எனைப் பிரிந்தி ருந்த
நாட்களில் அவள டைந்த
கவலையைச் சொல்லக் கேட்பேன்;
கண்ணீரைத் துடைப்பேன்!' என்று 96

தன்னுள்ளே எண்ண மிட்டான்;
தன்வீடு வந்து சேர்ந்தான்;
அன்னையைத் தழுவிக் கொண்டான்;
அப்பனின் கால்ப ணிந்தான்;
முன்தனக் காக வந்து
முற்றுகை இட்டு நிற்கும்
சின்னவர் பெரியோர்க் கண்டு
சிரித்தவர் நலத்தைக் கேட்டான். 97

பாப்பாத்தி நலத்தைக் கேட்கப்
பறந்தது நெஞ்சம்! கொம்புச்
சீப்(பு)எட்டிப் பார்க்கும் சட்டைப்
பைக்குள்ளே சிங்கம் போட்ட
தீப்பெட்டி எடுத்தான்; வீட்டுச்
சிறுவனைக் கூட்டிக் கொண்டு,
'தோப்பிற்குச் செல்வ தாக'
அன்னைக்குச் சொல்லிப் போனான். 98

குப்பனும் சிறுவ னோடு
குறும்பாகப் பேசிப், பின்னர்,
"எப்படி மூலை வீட்டுப்
பாப்பாத்தி இருக்கின் றாள்?" என்(று)
ஒப்புக்குக் கேட்பான் போல
உளவாகக் கேட்டான். பையன்
செப்பினான் யாவும். குப்பன்
திகைத்தொரு கட்டை யானான்! 99

## இயல் 10

# பாப்பாத்தியின் கடிதம்

துன்பத்தில் ஆழ்ந்தி ருப்போர்
துயரினை மாற்று கின்ற
இன்முகப் பிள்ளை போலக்
குப்பன்நாய் இருகால் நக்கி
முன்னோடிப் பாய்ச்சல் காட்டி
முழுவுடல் நெளித்த சைத்து
முன்னிரு கால்கள் தூக்கி
முகத்துநேர் குரைக்கும் தாவி! 100

களிப்பினில் துள்ளும் நாயைக்
கண்டனன் குப்பன்; சின்ன
இளிநகை உதட்டை மீறும்;
இருகையால் நாயை வாரிக்
களிப்போடு சேர்த்த ணைத்தான்;
கழுத்தினில் சிறிய சீட்டுப்
புளிபோல ஒட்டி நாயின்
பூட்டினில் இருக்கக் கண்டான். 101

"காதல! உம்மைக் காண
விழைகிறேன் கவலை மேட்டில்;
ஆதலால் வருக மாலை;
அன்பரே! தென்றல் காற்றின்
மோதலும், குயிலின் பாட்டும்,
முழுமதி இரவும் நெஞ்சில்
வேதனை தருமே யன்றி,
விருப்பினைத் தரவே இல்லை! 102

'நரகம்ஒன்(று) உண்(டு)அங்(கு)' என்று
நம்மவர் கூறு வார்கள்;
நரகத்தைக் கண்டார் போலே
நலிவெலாம் பேசு வார்கள்;
நரகத்தைக் கண்டார் இல்லை;
நாள்தொறும் உயிரை உண்ணும்
பிரிவினை உணர்ந்தி ருந்தால்,
நரகத்தைப் பெரிதாய்ப் பேசார்! 103

"பட்டது போதும்! என்னைப்
பாழாக்க எண்ண வேண்டாம்!
கட்டாயம் வருக! வந்தும்
கண்ணினைக் காட்டிச் செல்க!
பட்டாளச் செய்தி சொல்க!
பாப்பாத்தி யோடு பண்டு
கொட்டம்நீர் செய்த அந்தக்
கொல்லையை மறக்க லாமோ? 104

“குப்பையைச் சீய்த்துச் சீய்த்துக்
குரல்காட்டும் சேவல் நாட!
எப்படிப் பிரிவை யேற்று
நீரங்குப் போர்செய் தீரோ?
செப்புவீர் உமது நெஞ்சம்!
திரிமருப் பிரலை மெய்யால்
வெப்பத்தைக் கலைக்கு நீக்கும்
வெஞ்சுரம் எனினும் மானும்!” 105

என்றஅச் சீட்டைக் கண்டான்;
இடிஇடி எனச்சி ரித்தான்;
ஒன்றுமே விளங்கான் போலே
ஓயாது படித்தான் சீட்டை;
நின்றவன் நடந்தான்; பின்னர்
நினைத்தேதோ நின்றான்; நாயைக்
கொன்றிடக் கல்லெ டுத்தான்;
நாய்வாலைக் குழைக்கப் போட்டான்; 106

முடிவிற்கு வந்தான் போல
மும்முறை தலைய சைத்தான்;
கொடிபடர்ந்(து) ஏறித் தாழ்ந்த
கொய்யாவின் கிளைஅ சைத்தான்;
படபடத்(து) இரண்டு புட்கள்
பறந்திடக் கண்டான்; “சீச்சீ!
கொடியது காதல்!” என்று
கூவினான்; ஓடி னானே! 107

## இயல் 11

# கவலை மேட்டில் கொலை

சப்பாத்தி இடையில் நிற்கும்
தாழ்ந்தமா மரத்தின் மீது
கப்பிய அன்பி னாலே
இருஅணில் காயைக் கோதும்;
அப்பக்கம் புதரில் கோவை
அங்குள்ள செடியைச் சுற்றிச்
செப்பிடும் காதற் செய்தி;
சிரித்தணைந் திருக்கும் சிட்டு! 108

பாப்பாத்தி எட்டி எட்டிப்
பார்க்கின்றாள்; கவலை மேட்டுத்
தோப்பினில் குயிலி ரண்டு
கிளையினில் தொத்தித் தொத்தி
மாப்பிளை பெண்ணா மான
வாய்திறந்(து) ஏதோ பேசும்;
வேப்பனும் அரசும் காற்றில்
விளையாடும் பின்னிப் பின்னி! 109

குப்பனின் வரவும், நாளைக்
குடித்தன நினைவும் நெஞ்சில்
ஒப்பிலாக் களிப்பைத் தூண்ட
ஒருபுறம் தலையைத் தாழ்த்தி,
"இப்படி நானும் வாழ்வேன்"
என்றுபாப் பாத்தி அங்கே
செப்பிடு வித்தை காட்டும்
செடிகொடிக் குரைத்தி ருந்தாள். 110

பாப்பாத்தி காணா வண்ணம்
தமிழச்சி பதுங்கி வந்து
ஏய்ப்பதற் காகக் கண்ணை
இறுக்கினாள்; "குப்பா!" என்று
பாப்பாத்தி சாய்ந்தாள்; கையால்
பரிவோடு பின்ன ணைந்தாள்;
வேப்பனின் மறைவி ருந்து
வெடுக்கெனச் சிரித்தான் பொன்னன்! 111

"குப்பனும் அதோபார்!" என்று
கூறினான் பொன்னன்; "கண்ணே!
தப்பாக நினைத்தி டாதே!
தனிமையில் உனது சொந்தக்
குப்பனைக் கூடிப் பின்னர்க்
கூப்பிடு; மறைந்து நாங்கள்
அப்பக்கம் இருப்போம்" என்றாள்
தமிழச்சி; அழகுப் பேழை! 112

வழிவழி காதல் வெள்ளம்
மீறிட இதழ்து டிக்க
வழியினைப் பார்த்தி ருந்தாள்
பாப்பாத்தி ; வந்தான் குப்பன் ;
" பழிகாரி! எனைவஞ் சித்த
பாதகி ! ' மீண்டும் உன்றன்
வழிக்(கு)எனை அடிமை யாக்க
வா !' என வரைந்திட் டாயோ ? 113

" நன்றடி ! உனைநான் இன்று
நமனுல(கு) அனுப்பு கின்றேன் ;
ஒன்றுநீ உண்மை சொன்னால்
உயிர்தப்பும் ; வேற்று ஒனோடு
சென்றவள் மீண்டும் என்ன
செய்வதற்(கு) எனைஅ ழைத்தாய் ?
கொன்(று)உனை அமைதி காண்பேன் ;
கூறடி உண்மை !" என்றான். 114

பதிலொன்றும் பேசி டாது
பாப்பாத்தி அழுதி ருந்தாள் ;
புதரிடை இருந்து பொன்னன்
குப்பனின் முன்னர்ப் போந்து,
" பதறுதே குப்பா ! இந்தப்
பாவையை உன்பொ ருட்டே
முதியவர் மணக்கா முன்னம்
மீட்டேன் ;ஊர் வசவும் ஏற்றேன் !" 115

என்றனன்; ஆனால், குப்பன்
‘இவன்தானே எனது காதல்
கொன்றவன்?’ என்று சீறிக்
குத்தினான்! வீழ்ந்தான் பொன்னன்!
குன்றுகள் எதிரொலிக்கக்
‘கொலை! கொலை!’ என்ற கூச்சல்
சென்றது திசைகள் நான்கும்!
சேர்ந்தது கும்பல் ஆங்கே! 116

## இயல் 12

## ஊர் மன்றத்தின் தீர்ப்பு

"குப்பனே கொலைஞன்!" என்று
தமிழச்சி கூச்ச லிட்டாள்;
"குப்பனே கொலைஞன்!" என்று
பாப்பாத்தி குறைஇ ரந்தாள்;
"தப்(பு)" என்றார் ஊர்நாட் டாண்மை;
"சான்(று) உண்டோ உங்கட்(கு)?" என்றார்;
செப்பினர், "சான்(று) எங் கட்குத்
தெய்வமே!" என்(று) அப் பெண்கள்! 117

குப்பனை ஊர்நாட் டாண்மை
கூப்பிட்டார்; "நீயே என்று
செப்புகின் றார்கள் இந்தத்
தெளிவிலா இரண்டு பெண்ணும்;
ஒப்புக்கொள் கின்றா யாநீ?
உன்மீது சாற்றப் பெற்ற
தப்பினை விலக்கச் சான்று
யாரேனும் உண்டா?" என்றார். 118

தலையினைத் தாழ்த்திக் குப்பன்
சான்(று)என வந்தோன் சொல்வான் :
“கொலைசெய்தாள் கொல்லை மேட்டில்
தமிழச்சி ; கண்ணால் பார்த்தேன் ;
மலைப்புற மாக மாலை
குப்பனும் நானும் வந்தோம் ;
கொலையினைக் கண்டோம் ; நாங்கள்
கூவினோம் ; வந்தார் மக்கள். 119

“‘பொன்னன்பாப் பாத்தி யோடு
புதுஉற(வு) ஆனான்’ என்று
முன்னமே என்னி டத்தில்
தமிழச்சி முணுமு ணுத்துச்
சொன்னதுண்(டு) ; அதனால் இன்று
கொலைசெய்யத் துணிந்தாள் போலும்!”
என்றனன். தீர்ப்புச் சொல்வோர்,
“இருக்கலாம் ; உண்மை !” என்றார் ! 120

பழிவாங்க வேண்டும் என்று
காலத்தைப் பார்த்தி ருந்த
இழிநெஞ்சர் அவ்வூர் மக்கள்
‘இதுநல்ல செவ்வி’ என்றே
குழுமினர் மன்றத் துள்ளே !
தமிழச்சி மீது குற்றம்
விழுந்தது ! சிறைக்கூ டத்தே
விலங்கிட்டுத் தள்ளி னார்கள் ! 121

## இயல் 13

# பாப்பாத்தி ஒப்படைக்கப்பட்டாள்

---

பாப்பாத்தி கையி ரண்டும்
தமிழச்சி பற்றித் தந்து,
"காப்பாற்று, மதுரை வீரா!
கண்ணைப்போல் இவளை; ஏழை
சாப்பாட்டைத் திருடித் தின்று,
சாதியை வகுத்து நம்மை
ஏய்ப்பாரின் காலம் இன்னும்
எத்தனை நாளோ? பார்ப்போம்! 122

"ஒன்றுனக்(கு) இன்னும் சொல்வேன்:
உயிருள்ள வரையில் நீதான்
சென்றுநான் செய்து வந்த
சேரியின் தொண்டைச் செய்வாய்;
என்றவர் விழிக்கின் றுரோ
அந்நாளே இந்த நாட்டில்
பொன்றிய உடைமை எல்லாம்
பொதுவாகும் நன்னாள் ஆகும்! 123

"உழைப்பவர் விழித்துக் கொண்டால்
ஊரினை ஏய்த்து நாளும்
பிழைப்பவர் அற்றுப் போவார்;
பின்னேது சாதி சண்டை?
உழைப்பவர் ஒன்று சேர்ந்தால்
தொந்தியைத் தடவி உண்டு
கொழுத்திடு பணக்கா ரர்கள்
கூட்டமும் ஓட்டம் தம்பி! 124

"எதிர்ப்புக்குக் கலங்கி டாதே;
எவரென்ன செய்திட் டாலும்
அதற்காக வருந்தி டாதே;
அஞ்சாதே; உலகை மாற்றப்
பொதுப்பணி எதுவா னாலும்
புரிந்திடு; தயங்கி டாதே;
மதுவுண்ட உலகம் உன்னை
வஞ்சிக்கும்; விழிப்பாய்; வெல்வாய்!" 125

என்றனள்; சிறைக்குச் சென்றாள்
தமிழச்சி; ஏழைப் பெண்ணாள்!
குன்றிடைப் பகலோன் இந்தக்
கொடுமையைச் சீறு வான்போல்
சென்றனன் மேற்குத் திக்கில்!
ஊரினில் இடிந்த வீட்டுப்
பொந்தினில் இந்தத் தீர்ப்பைப்
பொறுக்காமல் அலறும் ஆந்தை! 126

## இயல் 14

## சேரியில் தீ! தீ!

---

சீனத்துக் கறுப்பு மேனிச்
சேரிவாழ் பருவப் பெண்கள்
மானொத்த விழியும், வட்ட
மதியொத்த முகமும் காண
வானிடை மிதந்து செல்லும்
மதியினை, வெள்ளித் தட்டைத்
தான்வந்து தடுக்கும் மேகம்!
தடுப்பதற்(கு) அதனால் ஆமோ? 127

சேரியில் உள்ள ஆண்கள்
தெருவினில் கும்ப லாகப்
பாரிஅ டிக்கின் றார்கள்
பால்நிலா ஒளியில்; சற்றுத்
தூரத்தில் ஓடை மீட்டும்
முழவிற்குத் துணையாய் வீட்டின்
ஓரத்தில் பெண்கள் பாடும்
கும்மியை உற்றுக் கேளீர்! 128

# கும்மி

"சேருங்கள் சேரியில் உள்ளோரே! — சற்றுச்
சிந்தித்துப் பாருங்கள் பெற்றோரே!
ஊருக்(கு) உழைப்பவர் 'கஞ்சி! கஞ்சி!' — என்று
ஓலமிடுவது. சால நன்றோ? 129

"ஆண்டான் அடிமைகள் ஏய்ப்பதற்கே! — நம்மை
அடிமைக் குழியினில் சாய்ப்பதற்கே!
'தீண்டாமை' என்றொரு பொய்யுஞ்சொன்னார் — மீளும்
செய்திஉரைக் கின்றேன்: கேளுங்களே! 130

"கட்டாயமாய்க் கல்வி கற்கவேண்டும்! — சாதிக்
கடுகளை வெட்டிச் சாய்க்கவேண்டும்!
கொட்டாவி விட்டிங்குத் தூங்குகின்ற — தொந்திச்
சோம்பர்களைத் தலைகுட்ட வேண்டும்! 131

"கடமையாய் ஒவ்வொரு ஆணும்பெண்ணும்—நாட்டில்
கட்டாய வேலைகள் செய்யவேண்டும்!
உடமை பொதுசெய்து மக்களெல்லாம் — நாட்டில்
உண்டுகளித்திட வேண்டும் அய்யா!" 132

என்(று)அந்தப் பெண்கள் பாடும்
இசையினில் நெஞ்சை விட்டு
நின்றுகொண் டிருந்தான் வீரன்
நெடுநேரம் குடிசை முன்னர் ;
குன்றொத்த வீரன் தோளைப்
பாப்பாத்தி குடிசை ஓரம்
நின்றெட்டிப் பார்த்தி ருந்தாள் ;
மழைபட்ட நிலாமு கத்தாள் ! 133

வீரனும் அவளைப் பார்த்தான் ;
மெதுவாக அவளி ருக்கும்
கூரையின் ஓரம் வந்தான் ;
குந்தினான் ; மூச்செ றிந்தான் !
"பார்த்தீரா நிலவை ?" என்றாள்
பாப்பாத்தி ! மதுரை வீரன்,
"ஆருக்கென் னதனால் ?" என்றான் !
அவளோனோ தலைகு னிந்தாள் ! 134

"பாவியென் னாலே பொன்னன்
படுகொலைக்(கு) ஆளும் ஆனான் ;
பாவியென் னாலே, அந்தோ !
தமிழச்சி பாழே யானாள் ;
பாவியென் னாலே நீரும்
பலர்பகைக்(கு) ஆளும் ஆனீர் ;
பாவியேன் பிறந்தேன் ?" என்றாள்
பாப்பாத்தி ! வீரன் சொல்வான் : 135

"உன்னைப்போல் கோழைப் பெண்ணை
உலகினில் கண்ட தில்லை!
என்னம்மா குறைநான் செய்தேன்?
எதற்காக இந்தப் பேச்சு?
சொன்னதை மீண்டும் என்முன்
சொல்லாதே; சொல்வாய் ஆனால்,
என்னுயிர் நீங்கும்; சேரி
இடர்ப்படும்; வேண்டாம்!" என்றான். 136

"அப்படி யானால் உம்மை
அரித்திடும் துயர்தான் என்ன?
செப்பிடு, வீரா!" என்றாள்
பாப்பாத்தி; திகைத்தான் வீரன்;
'எப்படி உரைப்ப(து)?' என்று
கலங்கினான். இதற்குள் ளாகத்
"தப்பில்லை; என்மேல் காதல்!
சரிதானே? சொல்வாய்!" என்றாள். 137

வீரனோ கண்க ளாலே
விடைதந்தான்; 'தீ! தீ!' என்று
சேரியில் கூச்சல் கேட்கத்
திரும்பினான்; தெருவில் உள்ள
வீரனின் குடிசை வீடு
வெந்தது; பக்கம் உள்ள
ஓரிரு குச்சு வீடும்
உடன்வெந்து தணிந்த தந்தோ! 138

## இயல் 15

## சேரியில் புரட்சி

“பிடிபட்டான் திருடன்” என்று
பின்புற மாகக் கூச்சல்
இடியென முழங்கக் கேட்டார்
ஏழைகள்; சேரி மக்கள்!
துடிதுடித்(து) அவன்மேல் பாய்ந்தார்;
தூளாக நொறுக்கு கின்றார்!
அடியோசை சேரி எங்கும்
அதிர்ந்தது! வீரன் வந்தான்! 139

“அப்பாவே! அண்ணன் மாரே!
அடிக்காதீர்! பொறுத்தி ருங்கள்!
இப்படி விடுங்கள்! இந்த
இலுப்பையில் வரிந்து கட்டித்
தப்(பு)இவன் செய்த தற்குக்
காரணம் சாற்றக் கேட்போம்!
செப்பினால் விடுவோம்! இன்றேல்,
தீக்(கு)இரை செய்வோம்!” என்றான். 140

"உண்மையைக் கூறு கின்றேன்;
உயிர்ப்பிச்சை கொடுங்கள்!" என்று
மண்மீது கள்வன் வீழ்ந்து
வணங்கினான்; அங்குச் சூழ்ந்த
பெண்களோ, "இவன்இ ரண்டு
கண்களைப் பிடுங்கிப் பின்னர்
உண்மையைக் கேட்போம்!" என்று
புலிபோல உறுமி னார்கள்! 141

போருக்குப் பழங்கா லத்தே
புறப்பட்ட வீரர் போலே
ஊரார்கள் திரண்டு வந்தார்
ஒவ்வொரு தடியைத் தாங்கி!
"சேரியன் திமிர்அ டக்கித்
திரும்புவோம்!" என்று கூவிச்
சேரியை வளைத்துக் கொண்டார்!
திகைத்தார்கள் சேரி மக்கள்! 142

வீரனோ கொதித்(து)எ ழுந்தான்!
"மேலான எனது சொந்தச்
சேரியில் வாழு வோரே!
திரளுங்கள்! இனிமேல் நம்மை
ஊரார்கள் வாழ வொட்டார்!
உண்மையை நேரில் கண்டோம்!
வீரராய் வாழ்வோம்! கிட்டும்
வெற்றிதான்! புறப்ப டுங்கள்! 143

"சாதியை வகுத்து நம்மைப்
பாழ்செய்த தடியர் கூட்டம்
ஏதேனும் சிறிய நன்மை
நமக்காக நினைத்த(து) உண்டா?
தீதினைச் செய்வ தற்குச்
சிறிதேனும் மறந்த தில்லை!
ஆதலால், புறப்ப டுங்கள்!
அழித்துநம் வாழ்வைக் காண்போம்! 144

"காற்றினில், மழையில், கோடைக்
காலத்தில் அவர்த மக்குச்
சேற்றினில், புதரில், பாம்பு
தேள்வாழு மிடத்தில் எல்லாம்
சோற்றினை விளைத்துத் தந்தோம்;
சோம்பர்கள் மறந்து நம்மை
ஆற்றினில் புதைக்க எண்ணி
வந்துள்ளார்; ஆர்த்தெ ழுங்கள்! 145

"உற்றாரே! உறவி னோரே!
தமிழச்சி உங்கட் காக
நற்றொண்டு புரிந்த தற்குச்
சிறைசெய்தார்; நமது வீட்டைச்
சற்றேனும் இரக்க மின்றிக்
கொளுத்தினார்; தடிதாம் போடு
குற்றமே அறியா நம்மைக்
கொல்லவும் வந்து விட்டார்! 146

"சேரிக்கு நன்னாள் இன்று!
சேருங்கள்; ஒருகை பார்ப்போம்!
ஊரார்கள் நம்மை எல்லாம்
உமிஎன நினைத்தார் போலும்!
சேரியின் திறத்தைக் காட்டித்
திருநாட்டைப் பசியே இல்லா
ஓர்பொது வுடைமை நாடாய்
உருவாக்கப் புறப்ப டுங்கள்! 147

"நம்மவர் வாழ வேண்டும்;
இன்றேல்,நாம் வீழ வேண்டும்!
சும்மாநாம் அடங்கிப் போனால்
சோம்பர்கள் துளிர்த்துப் போவார்!
உம்மரும் வீரம் கேட்(டு)இவ்
உலகமே வியக்க வேண்டும்!
இம்மியும் கலங்க வேண்டாம்!
எல்லோரும் புறப்ப டுங்கள்!" 148

என்றனன் மதுரை வீரன்.
எழுந்தது புலியார் கூட்டம்!
கன்றுகள், ஊரார் எல்லாம்
கலங்கினர்! சேரித் தோப்பு
மன்றத்தில் ஊரார் எல்லாம்
வரிசையாய்க் கட்டப் பட்டார்!
"இன்றன்று தீர்ப்பு; நாளை!
இரும்!" என்றார் சேரி மக்கள்! 149

## இயல் 16

# தமிழச்சி மீட்கப்பட்டாள்

---

உமிழ்கின்றான் பரிதி காலை
பொற்றுகள் உயிர்கள் மீது;
கமழ்மலர் புல்லும் பூண்டும்
ஆயிரம் கதிர வன்காண்!
தமிழச்சி மீட்கப் பட்டாள்;
சேரியின் மன்றம் சார்ந்தாள்!
"எமதன்னை வாழ்க! வாழ்க!"
என்றனர் சேரி மக்கள். 150

தமிழச்சி காலில் வீழ்ந்தாள்
பாப்பாத்தி; தலையைத் தாழ்த்தி,
"எமதன்னை வாழ்க!" என்றாள்;
எல்லோரும் முழக்கம் செய்தார்!
"நமைவாட்டி வந்த காலம்
நலிந்ததே!" என்றான் வீரன்;
"அமைதியாய் இருங்கள்" என்று
தமிழச்சி அன்பாய்ச் சொன்னாள் 151

ஊரினில் உள்ளோர் எல்லாம்
கட்டுண்டு குருதி பாயச்
சேரியில் தலைகு னிந்து
செத்தாரைப் போலி ருந்தார்;
நேராக ஒவ்வோர் ஆளைத்
தமிழச்சி நிமிர்த்திப் பார்த்துச்
"சூரர்கள்!" என்றாள்; மற்றோர்
'தூ' என உமிழ்ந்தார் அந்தோ! 152

"சரியம்மா! இவர்கட் கென்ன
தீர்ப்புநீ சாற்று கின்றாய்?
எரியிட்டார் குடிசை கட்கே;
எங்களைக் கொல்ல வந்தார்;
உரியதைச் செய்வாய் அம்மா!
உன்னிச்சை எதுவோ அஃதே
பெரி(து)!" என்றார் சேரி வாழ்நர்!
தமிழச்சி பேச லானாள்: 153

"என்னரும் சேரி யாரே!
எழில்மிக்க தோழி மாரே!
பொன்,பொருள், நிலங்கள் எல்லாம்
பொதுவாகச் செய்து விட்டால்
இன்னலே மக்கட்(கு) இல்லை!
ஏற்றமும் தாழ்வும் இல்லை!
மன்னிய பசியும் இல்லை!
வஞ்சமும் கொலையும் இல்லை! 154

“நாட்டாண்மைக் காரன் இல்லை!
விரிவான நன்செய், புன்செய்,
தோட்டத்தை உடையான் இல்லை!
தூறற்குக் குடிசை அற்ற
ஓட்டாண்டி மக்கள் இல்லை!
ஒருசிலர் பசியால் சாவ
மூட்டையாய்ப் பணத்தைக் காத்துத்
தூங்காது விழிப்போன் இல்லை! 155

“ஆதலால், ஒன்று சொல்வேன்:
அதன்படி நடக்க வேண்டும்!
தீதொன்றும் செய்தி டாமல்
இவர்களைச் சிறையில் தள்ளிப்
பாதுகாத் திருப்பீர் சின்னாள்!
பலபொருள் பொதுவாய்ச் செய்து
யாதொரு குறைவு மின்றி
யாவரும் உண்ண வேண்டும்! 156

“ஏரினை வளர்த்து நாட்டில்
எல்லோரும் உழவ ராகி
ஊரினைச் செழுமை யாக்க
ஓயாமல் உழைக்க வேண்டும்!
போர்த்தொழில் பழக வேண்டும்!
புதுப்புதுக் கைத்தொ ழில்கள்
வாரணி பெண்ணும் ஆணும்
மகிழ்ந்தொன்றாய்ச் செய்ய வேண்டும்! 157

"ஒல்லாத கருத்தை எல்லாம்
ஒதுக்கியே தள்ள வேண்டும்!
கல்வியை முதியோர், ஆண்,பெண்
கருத்தாகக் கற்க வேண்டும்!
செல்வர்கள் என்ற பேரைத்
திருநாட்டில் நீக்கி, எல்லாம்
வல்லவர் என்ற பேரை
நம்மக்கள் வாங்க வேண்டும்! 158

"அண்டையில் உள்ள சேரி,
அதற்கடுத்(து) இருக்கும் சிற்றூர்
தொண்டர்கள் செல்ல வேண்டும்!
துயர்நீக்க முனைய வேண்டும்!
சண்டைக்கு வருவார் செல்வர்;
நமைத்தாழ்த்த நினைப்பார் என்றும்!
பெண்டுகாள்! சீறி அந்தப்
பித்தரைத் துரத்த வேண்டும்! 159

"பிறநாட்டுக் கலையில், வாழ்வில்
பிடித்ததைக் கொள்ள வேண்டும்!
பிறநாட்டில் அறிஞர் தந்த
பெருநூலைக் கற்க வேண்டும்!
அறங்கூட்டும் வள்ளுவன் நூல்,
அகப்பாட்டுப், புறப்பாட் டெல்லாம்
பிறநாட்டிற்(கு) உதவி உங்கள்
பெற்றியை நாட்ட வேண்டும்! 160

"காதலைச் செய்து மக்கள்
கடிமனை ஓம்பு கின்ற
நீதிலா வழக்கம் எங்கும்
செழித்திட வேண்டும்! மற்றும்
கோதிலாப் பெண்கள் கைம்மைக்
கொடுமைக்கா ளாகி டாது
காதலைச் செய்து நாட்டில்
அறப்பண்பைக் காட்ட வேண்டும்! 161

"சூது, பொய் நிறைந்த யோக
சுத்தானந் தங்கள் இங்ஙன்
ஏதேதோ சொல்லி உங்கள்
இன்தமிழ் நலங்கெ டுப்பார்!
காதுமீர் கொடுத்தி டாதீர்!
தாய்மொழி கண்ணின் மேலாய்ப்
பாதுகாத் திடவே வேண்டும்
நம்நாடு பண்ப டற்கே!" 162

என்றனள்; சேரி வாழ்நர்,
"இச்சைபோல் நடக்கும்!" என்றார்!
மன்றினில் மாட்டைப் போலக்
கட்டுண்டு கிடந்த குப்பன்,
"சென்றதை மறந்தி டம்மா!
தெரியாது கொலைக்குற் றத்தை
உன்றன்மேல் சொன்னேன், பாவி!
ஊரார்கள் பேச்சைக் கேட்டு! 163

"நாட்டினைத் திருத்த வந்த
நற்றமிழ்த் தாயே! மூடன்
நாட்டாண்மைக் காரன் பேச்சை
நான்கேட்டேன்; கெட்டுப் போனேன்;
தீட்டிய மரத்தில் பாய்ந்தேன்;
செய்ததை மறந்தி டம்மா!
காட்டிடு கருணை இந்தக்
கயவன்மேல்; பிழைப்பேன் ஏழை! 164

"சேரியைக் கொளுத்தச் சொன்னான்;
அதுவும்நான் செய்தேன்; பட்டேன்;
தீரநான் எண்ணி டாது
பொன்னனைக் கொன்று தீர்த்தேன்;
பார்அம்மா ஒருகண்!" என்றான்.
பாப்பாத்தி சீறி, "உன்றன்
வார்த்தைக்குப் பதிலே இல்லை;
வாய்மூடு; சிறையே!" என்றாள். 165

# இயல் 17

## திருமணம்

தலையினைக் குனிந்து மீண்டும்
பாப்பாத்தி சாற்று கின்றாள்:
"மலைநிகர் தோளான் வீரன்
வாழ்விற்கே அடிமை யானேன்;
உலகீரே! என்சொல் கின்றீர்?"
என்றனள். "உங்கள் இச்சை
நிலைக்கட்டும்!" என்றார் ஊரார்.
நீள்மரம் பூஉ திர்க்கும்! 166

தமிழச்சி, மதுரை வீரன் –
பாப்பாத்தி தழுவிக் கொண்டாள்!
"எமதரும் மக்காள்! வாழ்க!
இன்றேநான் இன்பம் கொண்டேன்!
அமைதியும் பெற்றேன்; பொன்னன்
அழிவையும் மறந்து விட்டேன்!
இமைபோல வாழ்க நீவிர்
மக்களைக் கணக்காய் ஈன்றே! 167

"இன்தமிழ் எனது மூச்சு!
திராவிடர் எனது கண்கள்!
பொன்னனே எனது நாடு!
பொதுப்பணி எனது காதல்!
மன்னிய பசியை நீக்க
உழைப்பதே எனது வாழ்க்கை!
பின்னொன்றும் வேண்டேன்; பொன்னன்
பிரிவின்மாற்(று) இவையே!" என்றாள். 168

பஞ்சாங்கம் பார்க்க வில்லை!
பார்ப்பானைத் தேட வில்லை!
மஞ்சள்நூல், தாலி, பீலி
வாங்கவும் இல்லை! தீயைக்
கொஞ்சமும் வளர்க்க வில்லை!
குந்தாணி, அம்மி எல்லாம்
வஞ்சகர் திணித்தார்! இந்த
மன்றலை வந்து பாரீர்! 169

இணைஇணை யாக வாழை
இறுக்கிய இல்லத்(து) உள்ளே
மணப்பறை, மேளா, தாள
வாச்சியம் முழங்கும்; காட்டுக்
கணக்கோலைக் கூச்சல் போன்று
கருணவும் அதிர்ந்தொ லிக்கும்;
மணமக்கள் களித்தி ருந்தார்
மாந்தழைப் பந்தர்க்(கு) உள்ளே! 170

பிள்ளையைப் பெற்(று)எ டுத்த
அங்குள்ள பெண்கள் எல்லாம்
வெள்ளத்தை, நிலம்,கால், வானை
வெய்யோனைத் தம்மூரால் வாழ்த்திப்
பள்ளத்துப் பூவும் நெல்லும்
மெய்யெலாம் தூவிப் பாடி
உள்ளத்தே மாற்றம் இன்றி,
'வாழ்ந்திட! உயர்க!' என்றார்! 171

விருந்தினர்க்(கு) எல்லாம் சோறு
மிகுபாலை வார்த்துத் தந்தார்;
அருந்தினர்; சிறிது நேரம்
அயர்ந்தனர்; வள்ளு வன்தன்
திருக்குறள் விளக்கம் அங்குச்
செய்(து)ஒரு புலவர் மற்றும்
விருந்தொன்று செவிக்குத் தந்தார்!
தமிழ்மணம் வாழ்க மென்மேல்! 172

## இயல் 18

# தமிழச்சி கண்ட நாடு

உருவானது, அடடா! நாடு
தமிழச்சி உரைத்த தைப்போல்!
திருநாட்டு மக்கள் எல்லாம்
திறமுற்ற மக்கள் ஆனார்!
வருவாய்க்கங்(கு) அளவே இல்லை!
மகிழ்வோடு வாழு கின்றார்!
திருநாடு காட்டாய் எங்கும்
திகழுதல் காண வாரீர்! 173

ஆண்டியும் அரசும் இல்லை!
அவசரச் சட்டம் இல்லை!
வேண்டிய(து) அவர்அ வர்க்கு
விருப்பம்போல் கிடைக்கும்! மன்றம்
ஆண்(டு)இல்லை வழக்குத் தீர்க்க!
அச்சமோ இல்லை! நெஞ்சில்
மூண்டிடும் காமம், வஞ்சம்
முளைப்பதற்(கு) இடமே இல்லை! 174

மூலைக்கு மூன்று நான்கு
முதியவர் கல்விச் சாலை!
ஆலைகள் அடுக்(கு)அ டுக்காய்
ஆங்காங்கு நிறைந்தி ருக்கும்!
வேலையே வேதம்! ஈசன்
விளையாடும் கோவில் கல்விச்
சாலைகள்! மடங்கள் சோறு
தந்திடும் விடுதி யாகும்! 175

படிக்காத மக்கள் இல்லை!
பலதொழில் வேண்டார் இல்லை!
கொடுப்பதற்(கு) இல்லை ஏழை!
கூடிவீண் காலம் போக்கும்
தடியர்கள் இல்லை அங்கே!
தாலியற் றாளும் இல்லை!
உடைமைகள் பொதுவே! எல்லா
உரிமையும் பொதுவே! வாழ்க! 176

வாழ்கவே தமிழிற் பூத்த
மதுவூட்டும் சங்க நூல்கள்!
வாழ்கவே வளமார் எங்கள்
திருவிடம்; வாழ்க மக்கள்!
வாழ்கவே என்றும் இன்ப
வளன்தரு பொதுவு டைமை!
வாழ்கவே காதல்! மக்கள்
வலிமையும் வாழ்க! வாழ்க!! 177

# எழிலோவியம்

○

— சில கருத்துக்கள் —

○

"எழிலோவியப் பாக்கள் நிழலும் பொழிலில் வழிதேன் பொழியும் பூக்கள். அவை இனிமையும் எழிலும் இயைந்து மிளிரும் கவிகள். இருந்து புலவர் வருந்திப் புனையும் பாட்டுப் போல, அடுக்கும் இன்சொற்களும் தொடுக்கும் எண்ணமும் புனைந்து வனைந்த செய்யுட்கள் அல்ல. அவற்றின் தன்மை இறுகி உறையும் தன்மையும் அன்று; உருகி ஒழுகும் நீர்மையும் அன்று; இயற்கையில் எடுத்த படங்களின் பண்பாம்!...தங்கள் பாக்களுக்கு 'எழிலோவியம்' என்பது பொருந்தும் இயற்பெயராகும் என்பதில் எவர்க்கும் யாதொரு ஐயமும் இராது."

-டாக்டர், பேராசிரியர், நாவலர், கணக்காயர், இளசைகிழார் ச. சோ. பாரதி.

* * *

"கவிதைகள் என்னுள்ளத்தைக் கொள்ளை கொண்டன. இவ்வளவு சிறந்த புலமை தங்கள் உள்ளத்தில் இதுகாறும் எவ்வாறு மறைந்து கிடந்தது என்று எண்ணி வியந்தேன். 'நிலா'விலுள்ள சொற்கள் பல என்னுளத்தில் உலாவிக்கொண்டிருக்கின்றன. தங்கள் தொண்டுக்கு நன்றி. அடுத்து ஒரு கவிதைக் கூட்டம் அச்சேறி வரவேண்டும் என ஆசைப்படுகின்றேன்."

—கி. ஆ. பெ. விசுவநாதம்.

○

மலர் நிலையம்

133, பிராட்வே, :: சென்னை-1.

